# THE MADRAS LEGISLATIVE ASSEMBLY.

**Wednesday, 8th March 1961.**

The House met in the Assembly Chamber, Fort St. George, at half-past eight of the clock, Mr. Speaker JTHE HON. DR. U. KRISHNA RAU) in the Chair.

## I.—CONDOLENCE RESOLUTION ON THE DEATH OF SRI GOVIND BALLABH PANT, UNION HOME MINISTER.

**THE HON. SRI C. SUBRAMANIAM:** கனம் சபா நாயகர் அவர்களே, நான் மிகுந்த ஆழ்ந்த வருத்தத்துடன் இந்தத் தீர்மானத்தை இந்தச் சபைமுன் சமர்ப்பிக்கின்றேன்—

"This House places on record its deep sense of sorrow at the demise of Pandit Govind Ballabh Pant, Union Minister for Home, and conveys its deep sense of sympathy to the members of the bereaved family."

நேற்றைய தினம் சபை நடந்து கொண்டிருக்கக்கூடிய மத்தியிலே இந்த துக்ககரமான செய்தி நமக்குக் கிடைத்தது. சென்ற 15 நாட்களாக ஸ்ரீ பந்த் அவர்களுடைய உடல்நிலையைப் பற்றி நாம் எல்லோரும் கவலையுடன் கவனித்துக் கொண்டு வந்தோம். அவர்களுடைய இறுதிக் காலம் கிட்டிவிட்டது என்கிற உணர்ச்சி நம்மிடத்திலே ஏற்பட்டு இருந்தாலும்கூட, இந்த முடிவைக் கேட்டவுடனேயே நம் எல்லோருக்கும் பெரும் அதிர்ச்சி ஏற்பட்டது என்பதில் ஆச்சரியப்படுவதற்கில்லை. சுதந்திரப் போராட்டக் காலத்திலிருந்து ஸ்ரீ பந்த் அவர்கள் நம்முடைய நாட்டு அரசியலிலே பெரிய முக்கியத்துவமான பங்கு கொண்டு, முக்கியப் பணியாற்றி வந்திருக்கிறார்கள். அவர்கள் சுதந்திரம் வருவதற்கு முன்பே யுனைடெட் பிராவின்சாக இருந்த அந்த மாகாணத்து சட்ட சபையிலும் சரி, அதற்குப் பிற்பாடு டெல்லியிலே இருந்த மத்திய சட்டசபையிலேயும் சரி அவர்கள் தங்களுடைய திறமையை நன்கு விளக்குகின்ற முறையிலே பணியாற்றி வந்தார்கள். காங்கிரஸ் சர்க்கார் நிர்வாகப் பொறுப்பை ஏற்றதற்குப் பிற்பாடு உத்திரப் பிரதேசத்திலே அவர்கள் முதல் மந்திரியாக இருந்து, அங்கே இருக்கக்கூடிய, அங்கே நடந்த பல்வேறு முன்னேற்றத் திட்டங்களுக்கு அவர்கள் பொறுப்பாக இருந்திருக்கிறார்கள். அரசியல் நிர்ணய சபை கூடியபோதும், அந்தச் சபையிலே ஒரு முக்கிய அங்கத்தினராக இருந்து, அங்கு ஏற்பட்ட பல சிக்கலானப் பிரச்னைகளுக்கு வழி காண்பதற்கு அவர்கள் உதவியாக இருந்தார்கள். அவர்களை நான் முதன் முதலில் நேரில் தெரிந்து கொள்ளக் கூடிய வாய்ப்பு அரசியல் நிர்ணய சபையில்தான் ஏற்பட்டது. இதற்குப் பிற்பாடு இன்னும் நெருக்கமாக தேசிய அபிவிருத்திக் கவுன்சில் கூட்டங்களிலே அவர்களுடன் பழகக்கூடிய வாய்ப்பு எனக்கு ஏற்பட்டது. அதற்குமேல் அவர்கள் உள்நாட்டு மந்திரியாக மத்திய சர்க்காரில் பதவியேற்ற பிற்பாடு, அதைவிட நெருங்கிய தொடர்பு கடந்த ஐந்தாறு ஆண்டுகளாக ஏற்பட்டது. எந்தவிதமான பிரச்னையாக இருந்தாலும் சரி, எந்தவிதக் கஷ்டம் ஏற்பட்டாலும்

எந்தவிதச் சங்கடம் ஏற்பட்டாலும் சரி அவர்கள் எல்லாவற்றிற்கும் வழி காணக்கூடிய முறையிலே நம்முடைய ராஜ்யத்திற்கும் உதவி வந்திருக்கிறார்கள். அதேபோல் மற்ற ராஜ்யங்களுக்கும் உதவி வந்திருக்கிறார்கள். நாட்டுக்கும் பொதுவாக உதவி வந்திருக்கிறார்கள். எதிலும், முக்கியமாக ராஜ்யங்களிடையே ஏற்படக்கூடிய எந்தப் பிரச்னைகளையும் தீர்த்து வைப்பதிலே அவர்களைப் போல் சுமுகமாக முடித்து வைக்கின்றவர்கள் இனிமேல் ஏற்படுவார்களா என்பது எனக்குச் சந்தேகமாக இருக்கிறது.

இந்தச் சபைக்குத் தெரிந்திருக்கலாம் என்று நினைக்கிறேன். கேரளத்திற்கும், நமக்கும் பரம்பிக்குளத் திட்டத்தைப் பற்றி சில கருத்து வேற்றுமைகள் ஏற்பட்டபோது, அதில் அவர்கள் முக்கியமான பங்கு எடுத்துக் கொண்ட காரணத்தினால் தான் அந்தக் கருத்து வேற்றுமைகளை வெகு சுலபமாக தீர்த்து வைக்க முடிந்தது. அது நமக்கு ஏற்பட்ட ஒரு நல்ல காரியம் என்பதால், இதை உதாரணத்திற்காகச் சொன்னேன். ஆனால் இதைவிட சிக்கலான பல பிரச்னைகளை அவர்கள் தீர்த்து வைத்திருக்கிறார்கள். அதிலும் முக்கியமாக, மொழிப் பிரச்னை நமக்குத் தெரியும். அந்த மொழிப் பிரச்னையிலே எவ்வாறு ஒரு ஒற்றுமையான கருத்து நிலவப் போகின்றது, இதன் மூலமாக குழப்பமான சூழ்நிலை ஏற்பட்டாலும் ஏற்படுமே என்று பயந்த காலம் உண்டு. ஆனால் அந்தப் பொறுப்பை இவர் ஏற்றுக்கொண்டு, அந்த மொழிப் பிரச்னையைத் தீர்த்து வைத்தது உண்மையிலேயே நாட்டுக்குச் செய்த ஒரு பெரும் பணி என்று நான் கருதுகின்றேன். அதிலும் முக்கியமாக நாம் எடுத்த முடிவை அவர்களிடத்திலே நாம் கொண்டுபோய் கொடுத்தபோது, "இந்த அடிப்படையில் தீர்வு காண்பதற்கு எல்லாவிதமான முயற்சிகளும் செய்வேன்" என்று உறுதி சொன்னதோடு மாத்திரமல்ல. இதிலே அடிப்படையான மாறுதல்கள் ஏதாவது ஏற்பட வேண்டுமென்று சொன்னால், சென்னை அரசாங்கத்தை கலந்தாலோசிக்காமல் எந்த மாறுதலையும் செய்வதில்லை என்ற உறுதியையும் அவர்கள் கொடுத்து, அந்த முறையிலே இந்த மொழிப் பிரச்னையை சுமுகமாகத் தீர்த்து வைக்க உதவி செய்தார்கள்.

சர்க்கார் பணியில் மட்டுமல்ல. அதிலும் முக்கியமாக காங்கிரஸ் கட்சியில் இருக்கக்கூடிய எங்களுக்கு அவ்வப்போது மனத்தாங்கல் ஏற்படுமாயின், கருத்து வேற்றுமைகள் ஏற்படுமாயின்—இது எல்லாக் கட்சிகளுக்கும் ஏற்படக்கூடிய அனுபவம்—அப்போது இந்த நல்ல பண்பாடுள்ள தலைவர் அந்தக் கருத்து வேற்றுமைகளைக் களைந்தெறிந்து ஒற்றுமைச் சக்தியை வளர்ப்பதற்கு உதவியிருக்கிறார்கள். அம்முறையிலேயும் பல ஆண்டுகளாக அவர்கள் காங்கிரஸ் கட்சிக்கு பல பெரும் பணிகளை ஆற்றி வந்திருக்கிறார்கள். என்னைப் பொறுத்த வரையிலே அவர்கள் ஒரு தந்தையைப்போல் இருந்து, அவ்வளவு அன்புடன் நடந்து வந்திருக்கிறார்கள் என்று நான் சொல்லும்போது, அது என்னுடைய தனிப்பட்ட அனுபவம் என்பதை நான் சொல்லிக் கொள்கிறேன். ஆனால் இதே எண்ணம் ஆயிரக்கணக்கானவர்கள்

மனதிலே ஏற்படும் என்பதில் சந்தேகமில்லை. அவர்களிடத்திலே யார் சென்றாலும், அவர்களை அன்புடன் வரவேற்று அவர்களுடைய கஷ்டங்கள் என்ன என்பதை அனுதாபத்துடன் கேட்டு உணர்ந்து, அந்தக் கஷ்டங்களைத் தீர்த்து வைப்பதற்கு என்றைக்கும் அவர்கள் முயற்சி செய்து வந்திருக்கிறார்கள். அப்படிப்பட்டவர் நம்மிடத்திலேயிருந்து இந்தச் சமயத்திலே நீங்கியது நாட்டிற்குப் பெரும் நஷ்டமென்பதில் சந்தேகமே கிடையாது. அவர்கள் இன்றைக்கு நம் நாட்டிலேயிருந்து மறைந்ததன் காரணமாக, நம் எல்லோருடைய பொறுப்பும் சற்று அதிகமாகி இருக்கிறது என்பதை நான் வலியுறுத்திக் கூற விரும்புகிறேன். இதுபோன்று பெரும் தலைவர்கள் மறையும்போது அவர்கள் எடுத்துக்கொண்ட முயற்சிகளை அவர்கள் கண்ட கனவுகள் எல்லாம் நினைவாகும்படி முயற்சி செய்வதுதான் நம்முடைய கடமை, நாம் அவர்களுக்குச் செய்யக் கூடிய, செலுத்தக்கூடிய நன்றி மரியாதை என்பதைத் தெரிவித்துக் கொண்டு, இந்தச் சபையிலேயும் அவர்கள் எடுத்துக் கொண்ட முயற்சிகள், அவர்கள் கண்ட கனவுகளை நனவாக்கும் முறையிலே, நாட்டிலே நல்லதொரு சமுதாயத்தை அமைக்கின்ற முறையிலே, இந்தச் சபையும் அவர்கள் காட்டிய வழியைப் பின்பற்றி நடக்க வேண்டுமென்ற கருத்தைத் தெரிவித்துக் கொண்டு, இந்தத் தீர்மானத்தை இந்தச் சபை ஏற்றுக்கொள்வதுடன், இந்தத் தீர்மானத்தின் மூலம் அவர்களுடைய மக்களுக்கும், குடும்பத்தாருக்கும், நம்முடைய அனுதாபத்தைத் தாங்கள் தெரிவிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

SRI P. S. CHINNADURAI : மதிப்பிற்குரிய கனம் சபாநாயகர் அவர்களே, சர்க்கார் கட்சித் தலைவர் அவர்கள் பிரரேபணை செய்திருக்கின்ற இந்தத் தீர்மானத்தை நிறைவேற்றுவதிலே பிரஜா சோஷியலிஸ்ட் கட்சி முழுமனதுடன் இணைந்து நிற்க இருக்கின்றது என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். கடந்த சுமார் 30 ஆண்டுகளுக்கு மேலாக நான் சிறுவனாக இருந்த நாள் முதற்கொண்டு ஸ்ரீ கோவிந்த வல்லப பந்த் அவர்களைத்தான் என் ஆதர்ச புருஷராக உள்ளூர நினைத்து, ஏகலைவனைப்போல் செயல்பட்டு வந்திருக்கிறேன் என்ற விஷயத்தை நான் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். தேச பக்தியைப் பொறுத்தவரையிலே தளராத உறுதியும், தேசத்திற்காகக் கடைசி மூச்சு வரை உழைக்க வேண்டும் என்ற மனத்திட்பமும் இன்றைக்கு இந்த நாட்டில் இருக்கும் ஒவ்வொருவருக்கும் நிரம்பியிருக்க வேண்டும் என்பதற்கு அவர்களுடைய செயல்கள்தான் எனக்கு உதாரணமாக விளங்குகிறது. மிகவும் சங்கடமான கொள்கை வேறுபாடுகள் நேருகின்ற நேரத்திலும் ஸ்ரீ கோவிந் வல்லப பந்த் அவர்களுடைய கடமை உணர்ச்சியையும், உறுதியையும் உள்ளூர பாராட்டாமல், அவரை நினைக்காமல் இருக்க முடிவதில்லை. பழந் தலைமுறையைச் சேர்ந்த தலைவர்கள் ஒருவர் பின் ஒருவராக மறைந்து கொண்டிருப்பது உண்மையிலேயே நம்முடைய துரதிருஷ்டம். அது நம்முடைய தேசத்திற்காக நாம் ஆற்றவேண்டிய பொறுப்புகளையும் கடமைகளையும் மிகவும் அதிகப்படுத்துகின்றன என்றுதான் கருதுகிறேன். ஒரு

வகையிலே பார்க்கப்போனல், ஸ்ரீ கோவிந்த் வல்லப பந்த் அவர்கள் அகால மரணம் அடைந்துவிட்டாரோ என்று கூட நான் நினைக்கிறேன். இந்த தேசத்தில் விளைந்து வருகின்ற பல்வேறு வகையான பிரிவினைச் சக்திகளும், ஆங்காங்கு மக்கள் மத்தியிலே தலைதூக்க ஆரம்பித்திருக்கிற குரோதத் தன்மைகளும் அவருடைய மனதை உண்மையிலேயே மிகவும் உறுத்தியிருக்கிறது என்றுதான் எண்ணுகிறேன். அவர்களுடைய மறைவினல் நமக்கு உண்மையிலேயே தாங்கமுடியாத ஒரு பொறுப்பு சுமந்திருக்கிறது. மிகவும் கஷ்டமான காலத்தில் இந்தப் பொறுப்பை சுமப்பதற்குரிய நிலையை இறைவன் தான் அருள வேண்டும். அவருடைய செயல்களே நாம் தேசத்திற்கு ஆற்றவேண்டிய நமது கடைமைகளை சரிவர ஆற்றுவதற்குத் துணை என்று கூறி என்னுடைய வார்த்தைகளை முடித்துக் கொள்ளுகிறேன்.

SRI M. KALYANASUNDARAM : கனம் சபாநாயகர் அவர்களே, கனம் நிதி அமைச்சர் அவர்கள் பிரேரேபித்துள்ள தீர்மானத்தை நான் எனது கட்சியின் சார்பிலும், என்னுடைய சார்பிலும் இருதயபூர்வமாக ஆதரிக்கிறேன். அவர் கூறிய கருத்துக்களையும் நான் மனப்பூர்வமாக ஆதரிக்கிறேன். கோவிந்த் வல்லப பந்த் அவர்கள் நம்முடைய நாட்டில் சுதந்திர போராட்டத்தின் ஒரு முக்கியமான காலகட்டத்தின் பிரதிநிதி. அவர் நடமாடிக் கொண்டிருந்ததே நம்முடைய சுதந்திரப் போராட்டம் எவ்வளவு கடுமையாக இருந்தது என்பதற்கு ஒரு நினைவு சின்னமாக இருந்தது. அவருடைய தலை நடுக்கமும், உடல் நடுக்கமும், அவர் உடல் நம்முடைய சுதந்திர போராட்டத்தில் அனுபவித்திருக்கக்கூடிய கஷ்டத்தை நமக்கு நினைவூட்டக்கூடியது. 1940-லோ அல்லது 1942-லோ நாம் சுதந்திரப் போராட்டத்தில் பங்கு எடுத்திருப்பது அவ்வளவு கடுமையல்ல. கோவிந்த் வல்லப பந்த் அவர்கள் சுதந்திரப் போராட்டத்தில் முன்னணியில் நின்று போலீஸ் துப்பாக்கிக்கு அஞ்சாமல், தடிக்கு அஞ்சாமல், அடக்கு முறைக்கு அஞ்சாமல் நின்று அடி உதைகளை அனுபவித்து நடமாடும் பிரதிநிதியாக இருந்து வந்திருக்கிறர். இப்பொழுது சுதந்திரத்தின் பலனை அனுபவிக்க நினைக்கக்கூடியவர்களுக்கு அவர் ஒரு எச்சரிக்கையாக இருந்து வந்திருக்கிறர் சுதந்திரம் பழுத்த மாம்பழத்தைப் போல் சுலபமாக அடைந்தது அல்ல, இவ்வளவு கஷ்டம் அனுபவித்த சுதந்திரத்தைப் பெற்றிருக்கிறேம் என்று நமக்கு நினைவூட்டக்கூடிய நினைவுச் சின்னமாக அவர் விளங்கினர்கள்.

சுதந்திரம் அடைந்தபிறகு கூட நம்முடைய நாட்டில் அநேக பிரச்னைகள் ஏற்பட்டிருக்கின்றன. நிர்வாகத்தில் இருக்கக்கூடியவர்களுக்கு எல்லாப் பிரச்னைகளையும் சுமுகமாகத் தீர்த்து ஜனங்கள் விரும்புகிறபடி அல்லது பல பிரிவினர்கள் விரும்புகிறபடி எல்லோருடைய ஆதரவையும் பெறமுடியும் என்ற நம்பிக்கை சில சந்தர்ப்பத்தில் ஏற்படலாம். சிலருடைய அதிருப்தியையும் பெறவேண்டியிருக்கலாம். பொறுப்பில் இருப்பவர்கள் இதை உறுதியுடன்

8th March 1961] [Sri M. Kalyanasundaram]

உணர்ந்து பணியாற்றவேண்டும் என்பதற்கு அவர் ஒரு எடுத்துக் காட்டாக விளங்கினர். "My head may shake, my hands may shake, but my heart never shakes." என்னுடைய தலை நடுங்கலாம், என்னுடைய கை நடுங்கலாம், ஆனால் என்னுடைய உள்ளம் நடுங்குவது கிடையாது என்று அவர் தன்னுடைய மன உறுதியை எடுத்துக் கூறியது எனக்கு ஞாபகம் வருகிறது. அவருடைய உள்ளத் துணிவை இது எடுத்துக் காட்டுகிறது. இந்திய மக்களுடைய ஒற்றுமை எவ்வளவு அவசியம் என்பதை உணர்ந்து, இந்திய மக்களை ஒன்று திரட்ட மன உறுதியுடன் போராடிய பிரதிநிதி அவர். கனம் நிதி அமைச்சர் அவர்கள் கூறியபடி மொழிப் பிரச்னை சம்பந்தமாக ஏற்படுகிற தகராறுகளை ஒற்றுமையையே குறிக்கோளாகக் கொண்டு அவர் தீர்த்து வைத்துப் பணி புரிந்ததுபற்றி, அவர் காட்டிய வழியை நாம் பின் பற்றக் கடமைப்பட்டிருக்கிறோம். எதிர் நோக்குகிற பிரச்னைகளைத் தீர்த்து வைப்பதற்கான நடவடிக்கைகள் எடுக்கும்போது—சில சமயங்களில் உடன்பாடு இருக்கலாம், சில சந்தர்ப்பங்களில் கருத்து மாறுபாடு இருக்கலாம்—சண்டை போடுகிறபொழுது மன உறுதி யுடன் சண்டை போடுவார். தயவு தாட்சண்யமின்றி சண்டை போடுவார். ஆனால் சண்டை முடிந்த பிற்பாடு அந்தக் காயங்களை ஆற்றுவதற்கு அவர் வைத்தியர் மாதிரி நடவடிக்கை எடுத்துக் கொள்ள முன் வருவது மிகவும் பாராட்டத்தக்கது. சமீபத்தில் நடந்த கிளர்ச்சி சம்பந்தமாகக்கூட அவர் எடுத்த முடிவு நமக்கு இப்பொழுது ஞாபகம் வருகிறது. அப்பேர்ப்பட்ட பண்பு சுதந்திரப் போராட்டத்தில் முன் அணியில் நின்று பணி புரிந்தவர் களுக்குத்தான் ஏற்படும். இப்பொழுது நாட்டில் இருக்கக்கூடிய நிலைமையில் அந்தப் பண்போடு நிர்வாகத்தை நடத்தக்கூடிய திறமை உள்ளவர்கள் அந்த இடங்களுக்கு வருவார்களா என்ற கவலை அதிகமாக ஏற்படும். அப்பேர்பட்டவர்கள் மறையக்கூடிய சந்தர்ப்பத்தில் நமக்கு கவலை அதிகம். மரணம் யாராலும் தவிர்க்க முடியாது. மரணம் இயற்கையின் நியதி. அப்பேர்பட்ட பண் புடையவருடைய மரணத்திற்குப் பிறகு அவரைப் பின்பற்றக் கூடிய இதர மந்திரிகளும் சரி, நாட்டிலுள்ள மற்றவர்களும் சரி அவர் என்ன நல்ல கொள்கைகளுக்காக நின்றார்களோ அவைகளை மட்டும் ஞாபகப்படுத்திக் கொண்டு, அந்த நல்ல கொள்கைகளை மேலும் வளர்க்கவேண்டும் என்று உறுதி எடுத்துக் கொள்ளவேண் டியது நமது கடமை என்பதை ஞாபகப்படுத்திக்கொண்டு, கனம் நிதி அமைச்சர் அவர்கள் கொண்டு வந்திருக்கக்கூடிய இந்தத் தீர்மானத்தை என்னுடைய கட்சி சார்பிலும், என்னுடைய சார்பிலும் ஆதரிக்கிறேன் என்பதை மீண்டும் தெரிவித்துக் கொண்டு, அவரது ஆத்மாவுக்கு என்னுடைய கட்சியின் சார்பிலும், என் சார்பிலும் வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

SRI C. N. ANNADURAI: சட்டமன்றத் தலைவர் அவர்களே, திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்பில் கோவிந்த் வல்லப பந்த் அவர்களுடைய மறைவுக்காக அவருடைய குடும்பத்தினருக்கு ஆழ்ந்த அனுதாபத்தையும் ஆறுதலையும் தெரிவிக்கின்ற தீர்மா னத்தை நான் முழுமனதோடு ஆதரிக்கிறேன். கட்சிக்கும்

[Sri C. N. Annadurai] [8th March 1961

நாட்டிற்கும் அப்பாற்பட்ட அளவிலே பெரிய புகழை பெறக் கூடியவர்கள் ஒரு சிலர்தான் தோன்ற முடியும். அப்படித் தோன்றுகின்ற ஒரு சிலரில் நம்முடைய காலத்தில் மிகுந்த கீர்த்தியோடு வாழ்ந்து, தன்னுடைய ஆற்றலின் ஒவ்வொரு பகுதியையும் நாட்டிற்காக அர்ப்பணித்து, கடைசி நிமிஷம் வரையில் தான் எடுத்துக் கொண்ட கடமையிலிருந்து வழுவாமல் அதிலே ஈடுபட்டு உயிர் நீத்த பெரியார் அவர். நாம் அனைவரும் எடுத்துக் கொண்டிருக்கிற காரியங்களிலே எவ்வளவு உறுதியாக இருக்கவேண்டும் என்ற பாடத்தையும், எவ்வளவு தியாக உள்ளத்தையும் வளர்த்துக் கொள்ள வேண்டும் என்ற நல்ல நெறியையும் தந்துவிட்டுச் சென்றிருக்கிறார். நம்மோடு இருந்தவர் என்ற நிலையிலிருந்து, இனி நாமும் எதிர்காலச் சந்ததியார்களும் பாடம் பெறத்தக்க வரலாற்று வீரராக மாறியிருக்கிறார். வரலாற்றிலே அவர் பெயர் இன்றையதினம் இணைந்துவிட்டது. வரலாற்றில் பெறத்தக்க நல்ல பாடங்களை நமக்குத் தந்துவிட்டு சென்றிருந்தவர்கள் இன்னும் நாட்டில் சில ஆண்டுகள் இருந்து பல சிக்கல்களை தீர்த்துவைக்கக் கூடாதா என்ற ஆவல் இருக்கிறது. இதுவரையில் அவர்கள் தந்திருக்கிற நல்ல பாடங்கள் நாட்டிற்கு வழிகாட்டியாக அமைய வேண்டும் என்ற உறுதியை துக்கத்தோடு சேர்த்து இணைத்து, இனி நம்முடைய கடமைகளைச் செய்யவேண்டும் என்பதைத் தான் இந்தத் தீர்மானம் எடுத்துக் காட்டுகிறது. கனம் நிதி அமைச்சர் அவர்கள் கொண்டு வந்திருக்கிற இந்த ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவிக்கும் தீர்மானத்தை ஆதரித்து திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்பிலும், நானும் என்னுடைய பங்கினைச் செலுத்திக் கொள்ளுகிறேன்.

* SRI V. K. RAMASWAMY MUDALIYAR : கனம் சபாநாயகர் அவர்களே, கனம் நிதியமைச்சர் கொண்டு வந்திருக்கும் தீர்மானத்தை நான் முழு மனதோடு ஆதரிக்கிறேன். நம் நாட்டிலே ஒரு ஒப்பற்ற தலைவர் இப்பொழுது மறைந்து விட்டார்கள். தற்பொழுது ஏற்பட்டிருக்கும் பல பிரச்சினைகளின் நடுவில், அவர்களுடைய யோசனைகளும், உதவிகளும் வேண்டிய நேரத்தில், அவர்கள் நம்மைவிட்டுப் பிரிந்ததைக் குறித்து வருந்தப்பட வேண்டியவர்களாக இருக்கிறோம். முக்கியமாக பிரதமர் நேருஜி அவர்களுக்கு வலது கைபோல் இருந்து, நாட்டிலே பல கோளாறுகள் இருந்த போதிலும், அவர்களுக்குப் பக்க பலமாக இருந்து பல பிரச்சினைகளையும் நன்றாகத் தீர்த்து வைக்கக்கூடிய பெரிய அரசியல் வாதியாக விளங்கினார்கள்; சுதந்திரப் போராட்டத்தில் பெரிய தியாகங்கள் செய்து, சைமன் கமிஷனைப் பகிஷ்காரம் செய்த ஒப்பற்ற தலைவராக விளங்கினார்கள். அவர்கள் ஏற்றுக் கொண்டிருந்த மாபெரும் பொறுப்புகளை ஏற்றுக்கொண்டு நேருஜி அவர்களுக்கு வேறு நபர் கிடைப்பார்களா என்பது சந்தேகமே. இந்த தீர்மானத்தை முழு மனதுடன் ஆதரிக்கிறேன். அவர்கள் ஆத்ம சாந்தி அடையப் பிராத்திக்கிறேன்.

8th March 1961] [Mr. Speaker]

MR. SPEAKER : The Chair would like to associate itself with the resolution just now moved by the Hon. the Leader of the House. Pandit Govind Ballabh Pant was one of the architects of our freedom. Together with Mahatma Gandhi, Sardar Vallabhai Patel and Pandit Jawaharlal Nehru, he struggled hard and suffered much for the attainment of freedom for our country. After the attainment of freedom, he was one of the pillars of our administration. Both in Uttar Pradesh where he was Chief Minister and at the Centre where he was the Home Minister, he showed administrative capacity of an extremely high order. He was respected by everybody for his honesty, integrity and steadfastness. His death creates a void which it is very difficult to fill. It is poignant that it should have occurred when our Prime Minister is not in Delhi, because Pandit Pant was our Prime Minister's great friend, philosopher and guide. I am afraid it will take a long time for us to discover another Govind Ballabh Pant who was very much respected by all. On his death, tributes were paid to him by all people belonging to all parties. I shall convey the resolution to the members of the bereaved family. May his soul rest in peace.

As a mark of respect and by way of passing the resolution moved by the Hon. the Leader of the House, I should like the hon. Members to stand in silence for two minutes."

The resolution was carried *nem. con.* all the Members of the Assembly standing in silence for two minutes.

## II.—QUESTIONS AND ANSWERS

## STARRED QUESTIONS.

*Tanks*

*651 *Q.*—SRI S. M. ANNAMALAI: கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

வடாற்காடு மாவட்டம், போளூர் தாலுகாவில் இராமாபுரம், வேளானந்தல் கிராமங்களில் புதிய ஏரிகள் கட்டுவது எந்த நிலையில் உள்ளது ?

THE HON. SRI P. KAKKAN : A proposal for the formation of a tank in Ramapuram village has been dropped. The formation of a tank in Velanandal village is considered not worthwhile.

*Agriculturists (Eviction)*

*652 *Q.*—SRI P. S. CHINNADURAI : கனம் உள்துறை அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) மதுரை ஜில்லா, பழனி தாலுகா "கரிக்காரன் காட்டுப்" பகுதியில் சென்ற இருபது ஆண்டுகளுக்கு மேலாக விவசாயம் செய்து கொண்டு வரும் ஏழை விவசாயிகளை பிரஸ் தாபப் பகுதியில் விவசாயம் செய்ய விடாமல் தடுக்க ஒருசிலர்